யினது தனங்களைத் தழுவுகின்ற, கருவை பெருமான் - திருக்கருவைச் சிவ பெருமான், என் உள் பகை மூன்றும் - எனது உட்பகைவர்க்கமாகிய (காமம் வெகுளி மயக்கம் என்னும்) மூன்றையும், வென்று - (தனது அருளென்னுந் தண்டத்தா லடித்து வலியடக்கிச்) சயித்து, சயம் - தானே, கொண்டு - (தனக் குச் சுவாதீனமாகக்) கொண்டு, இருக்கின் - (உன்னிடத்தில்) வீற்றிருப்பா னாயின், உனக்கு—, ஒரு காலும் - எக்காலத்திலும், தளர்வு இல்லை - தளர்ச்சி யுண்டாகாது ; (எ - று.)

காமம் வெகுளி மயக்க மென்னும் முக்குற்றங்களும் தம்வசப்படுத்தியத னால் அவற்றின் கையிற் சிக்குண்டுதவிக்கின்ற தமதுமனத்தை நோக்கி, 'சிவ பெருமான் தனது அருளென்னுந் தண்டினால் முப்பகைகளையும் அடித்து ஓட்டி உன்னைத் தன்வசமாக்கிக்கொண்டு தனது வெற்றி தோன்ற உன்னி டத்து வீற்றிருக்கப்பெறுவாயாயின், பிறகு ஒருகாலும் உனக்குப் பிறவித்தடு மாற்றமுண்டாகாமல் நற்கதிபெறுவாய்' என்று உபதேசித்துத் தேற்றிய வாறு. காற்றுமுதலியவற்றாற் குளத்துநீர் ததும்புகின்ற இயல்பையுடையதாக அதனுள்தோன்றுஞ் சந்திரபிம்பமும் தளும்புதல்போல, இருவினையினால் ஆன்மா வருந்துவதாக அதனுள்ளிருக்கும் மனமும் தடுமாறுகின்றதென உவ மையால் விளக்கினர். காமம் க்ரோதம் லோபம் மோஹம் மதம் மாத்ஸர்யம் என்று வடநூலார் உட்பகையை ஆறென்றுகூறவும், அவை காமம் வெகுளி மயக்கம் என்னும் மூன்றனுள் அடங்குதல்பற்றி, இங்கு 'உட்பகைமூன்று' என்றார். உட்பகையாவது - மனத்தில்தங்கி அதனை நல்வழியிற் செல்லவொட் டாது கெடுக்குந் தன்மையது; "காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன், நாமங் கெடக் கெடும் நோய்" என்றார் திருவள்ளுவனாரும். இனி, இச்செய்யுட்கு— சந்திரன் தனக்கு இயற்கையில் ஆட்டமொன்றும் இல்லாதிருந்தும் நீரினுள் தோன்றும்போது அங்கு அசைந்து தோன்றுதல்போல, சிவபெருமான் தனக்கு விகாரமொன்றும் இல்லாதிருந்தும் அவிச்சையால் தான் ஜீவாத்மா வாகத்தோன்றும்போது வருந்துவதாகத் தோன்றுவன் ; அந்த ஜீவாத்மா ஸோஹம்பாவனையால் அவிச்சைநீங்கின் மனந்தெளிவடைவனெனச் சிவாத் வைதமாகப் பொருள்கூறுவாரு முளர்.

கயங்கொண்ட நீர் - ஆழங்கொண்ட நீர் என்று பொருளுரைப்பாருமுளர். கயம் - யானை யெனினுமாம். சயம் = ஸ்வயம். இனி, வென்று - வலியடக்கி, சயம் [ஜயம்] கொண்டு - வெற்றிகொண்டு என்று உரைப்பினுமாம். (கூஉ)

93. தளர்வுவந்தெய்தின்வினையினைநோவர்தழைக்குஞ்செல்வக்
கிளர்வுவந்தெய்திற்றமைத்தாம்புகழ்வர்கிளைத்தபசுந்
துளவுவந்தோனுமுளரிவந்தோனுந்துதித்துநிற்பக்
களவுவந்தோன்செய்தகற்பனையீதென்றுகாண்கிலரே.

(இ - ள்.) 'ஈது - (சுகதுக்கங்கட்குக்காரணமான) இந்த ஊழ்வினை,— கிளைத்த - தழைத்த, பசும் துளவு - பசுமையான துளசிமாலையை, உவந்தோ னும் - விரும்பியணிந்த திருமாலும், முளரி வந்தோனும் - (அத்திருமாலினது

உந்தித்)தாமரையில் தோன்றிய பிரமதேவனும், துதித்து நிற்ப - தோத்திரஞ் செய்துநிற்க, களவு உவந்தோன் - திருக்களாவின்நிழலில் விரும்பியெழுந்தருளியிருக்கின்ற சிவபெருமான், செய்த—,கற்பனை - சங்கற்பமேயாகும்,' என்று—, காண்கிலர் - உண்மையறியாதவர்கள்,—தளர்வு வந்து எய்தின் - (தமக்கு) ஒருதளர்ச்சி வந்தால், விதியினை நோவர் - (அதற்குக்காரணமான) ஊழ்வினையை வெறுப்பார்கள்; தழைக்கும் செல்வம் கிளர்வு வந்து எய்தின் - மேன்மேற்பெருகுகின்ற செல்வக்கிளர்ச்சி (தமக்கு) வந்தால், (அப்பொது மாத்திரம்), தமை தாம் புகழ்வர் - (அதற்குக்காரணந் தாமேயென்று) தம்மைத் தாமே மேம்படுத்திப் பாராட்டிக்கொள்வார்கள் [ஊழ்வினைப்பயனென்று சிறிதுங்கருதார் என்றபடி]; (எ - று.)

கடவுளினது நிக்கிரகரூபமான சங்கல்பத்திற்குக்காரணமாகும் வினை பாபமென்றும், அநுக்கிரகரூபமான சங்கல்பத்திற்குக் காரணமாகும் வினை புண்யமென்றும் சொல்லப்படும்; புண்ணியத்தின்பயனாகச் செல்வமும், பாவத்தின் பயனாக வறுமைமுதலிய துன்பங்களும் நேர்கின்றன; உண்மை இவ்வாறிருக்க, இதனை அறியாத உலகத்துமனிதர், தமக்குத் தளர்வுநேர்ந்தால்மாத்திரம் அது விதியின்கொடுமையால் நேர்ந்ததென்று அவ்விதியை வெறுத்தலும், செல்வவாழ்க்கை நேர்ந்தபோது தமதுவிதியின்பயனாகவே அதுவுநேர்ந்ததென்று கருதாமல தமதுதிறமையால் நேர்ந்ததென்று தம்மை மதித்துச் செருக்குதலும் செய்கின்றனர் என்று அவர்களது அறிவின்மையை எடுத்துக் காட்டியவாறு. "செல்வம்வந்துற்றகாலைத் தெய்வமுஞ்சிறிதுபேணார்,...... வல்வினைவிளைவுமோரார் மண்ணின்மேல் வாழுமாந்தர்" என்றதும், "நன்றாங்கால்நல்லவாக்காண்பவ ரன்றாங்கால், லல்லற்படுவ தெவன்" என்ற திருக்குறளின் விசேடவுரையில், 'தாமே முன்செய்துகொண்டமையாலும் ஒட்டாது கழியாமையாலும் இரண்டும் இயைந்து அனுபவிக்கற்பால; அவற்றுள் ஒன்றற்கு இயைந்துஅனுபவித்து ஏனையதற்கு அதுசெய்யாது வருந்துதல் அறிவன்று என்பதாம்' என்றதும் இங்குக் காணத்தக்கன "மெய்த்திரு வந்துற்றாலும் வெந்துயர் வந்துற்றாலும், ஒத்திருக்கு முள்ளத்துரவோன்" என்றவாறு எப்போதும் ஒருநிலையிலநிற்றலே உத்தமர்களின் தன்மை யென்க.

துளவு - துளவி: வடசொல். முளரி - முள்ளாகியஅரையையுடையதெனத் தாமரைக்குக் காரணவிடுகுறிப்பெயர். நிற்ப உவந்தோன் என இயையும். களவு வந்தோன் என்றும்பிரிப்பர். ஈது - செய்யுளில் சுட்டு நீண்டுவந்தது.

91. காணப்பெற்றேன்கருவைபெருமானைக்களாநிழற்கீழ்ப்
பூணப்பெற்றேன்செய்யபொன்னடித்தாமரைபூணுமன்பு
பேணப்பெற்றேனவன்போராளிரங்களும்பேசப்பெற்றே
றுணப்பெற்றேன்கொடும்பாவமென்பால்வந்துநன்றுதற்கே.

(இ - ள்) (யான்), கருவை பெருமானை - திருக்கருவைச் சிவபெருமானை, களா நிழல் கீழ் - திருக்களாவின்நிழலிலே, காண பெற்றேன் - தரிசிக்கப்பெற்றேன்; செய்ய - சிவந்த, பொன் அடி தாமரை - (அப்பிரானது)

அழகிய திருவடித்தாமரைகளை, பூண பெற்றேன் - (தலையின்மீது) தரிக்கப் பெற்றேன்; பூணும் அன்பு-(அப்பெருமானிடத்துக்) கொள்ளவேண்டிய அன்பை, பேண பெற்றேன் - (என்னிடம்) பொருந்தப்பெற்றேன்; அவன் பேர் ஆயிரங்களும் - அவனது ஆயிரந்திருநாமங்களையும், பேச பெற்றேன் - உச்சரிக்கப்பெற்றேன்; கொடும் பாவம் என்பால் வந்து நண்ணுதற்கு - கொடிய தீவினை என்னிடம் வந்துசேர்தற்கு, நாண பெற்றேன் - கூச்சமடைந்தேன்.

பின்னர்க்கூறிய செயல்கட்கெல்லாங் காரணம் சிவபெருமானது தரிசனமே யாதலால், அதனை முன்னர் எடுத்துக்கூறினர். (கூ௪)

95. நண்ணலர்முப்புரம்விற்காமன்றன்புரநன்னகைத்தீக்
கண்ணனலேவிச்சுடுகளவீசர்கடலினஞ்சம்
விண்ணவர்வாழவருந்தியகாலைபுமெய்யில்வைக்கும்
பெண்ணவளங்குவிலகாதொழிந்ததென்பேதைமையே.

(இ - ள்.) நண்ணலர் முப்புரம் - பகைவர்களாகிய அசுரர்களது மூன்று பட்டணங்களையும், வில் காமன் தன் புரம் - கரும்புவில்லையுடைய மன்மதனது உடம்பையும்,-- (முறையே), நல் நகை தீ - நல்லசிரிப்பாகிய நெருப்பையும், கண் அனல் - நெற்றிக்கண்ணின் நெருப்பையும், ஏவி - பிரயோகித்து, சுடு - சுட்ட, களவீசர்—, விண்ணவர் வாழ - (அஞ்சிய) தேவர்கள் உயிர்வாழுமாறு, கடலின் நஞ்சம் - பாற்கடலில் தோன்றிய (ஆலாகல) விஷத்தை, அருந்திய காலையும் - உட்கொண்டபோதும், மெய்யில் வைக்கும் பெண்ணவள் - (தமது) உடம்பின் இடப்பாதியிற் கொண்டுள்ள உமாதேவியானவள், அங்கு - அவ்விடத்தினின்றும், விலகாது ஒழிந்தது - விட்டுச்செல்லாமல் (அங்கேயே) தங்கியிருந்தது, என் பேதைமையே - என்ன மடமைக்குணமோ? (எ - று.)

ஒருவன் நஞ்சுண்டால் அதனால் ஆபத்துநேர்தல் கண்கூடாகவிருக்க, சிவபெருமான் நஞ்சுண்டகாலத்தில் அப்பிரானது திருமேனியிற் செம்பாதியாக இருக்கின்ற உமாதேவி 'தனக்கும் ஆபத்து நேரக்கூடும்' என்று அஞ்சி விலகாமல் அப்போதும் உடனிருந்தது என்னபேதைமையோ! என்று வஞ்சப்புகழ்ச்சியணி வகையால், இறைவருடம்பினின்று உமாதேவி எப்போதும் பிரியாது உடனுறையும் உறுதித்தன்மையை விளக்கியவாறு: இறைவனைச் சார்ந்தார்க்கும் நஞ்சு முதலியவற்றால் நலிவுபிறவாமை இங்கு விளங்குதல் காண்க. முப்புரங்களை நகைத்தீயினாலும் காமனதுடம்பைக் கண்ணனலினாலும் சுட்ட களவீசர் என்று முறையே சென்று இயைதலால், முறைநிரனிறைப்பொருள்கோள். புரம் - பட்டணமும், உடம்பும் காலையும், உம்மை - உயர்வுசிறப்பு. (கூ௫)

96. பேதாதிபேதப்பிறவிகடோறும்பிறந்திளைத்தேன்
மாதாவும்பெற்றுவளர்த்திளைத்தாள்கொடுமாமறலி
தூதாளுங்கொன்றிளைத்தான்களவீசவித்துன்பத்துக்கோ
ராதாரநின்னிருபாதாரவிந்தத்தடைவதுவே.

(இ - ள்.) களவீச—! (நான்),—பேதம் அதிபேதம் பிறவிகள் தோறும் - பலவகையிலும் வேறுபாட்டையுடைய பிறப்புக்களிலெல்லாம், பிறந்து - பல தரம் பிறந்துபிறந்து, இளைத்தேன் - சலிப்படைந்தேன்; மாதாவும் - (அவ்வப்பிறவியில் எனக்குத்) தாயாயிருந்தவளும், பெற்று வளர்த்து இளைத்தாள் - பெற்றுப்பெற்று வளர்த்துவளர்த்து மெலிந்தாள்; மா கொடு மறலி தூது ஆளும் - மிக்ககொடிய யமனது தூதனாகிய கிங்கரனும், கொன்று இளைத்தான் - (பிறவிதோறும் எனது) உயிரை வாங்கிவாங்கிச் சலித்துப் போனான்; இ துன்பத்துக்கு - இவ்வாறு ஓயாதுவருகின்ற துன்பங்களை நீக்குதற்கு, ஓர் ஆதாரம் - ஒப்பற்ற துணையாவது, நின் இரு பாத அரவிந்தத்து அடைவது - உனது இரண்டு திருவடித்தாமரைகளிற் சேர்வதேயாம்; (எ - று.)

சிவபெருமானது திருவடிகளை யடைவதே பிறவித்துன்பங்கள் நீங்கி நற்கதிபெறுதற்கு உபாயமா மென்பது, கருத்து யான் சிவபிரானது திருவடியைச் சேர்ந்ததனால், இனி எனக்கும் பிறக்கும்படி நேராது; தாயர்கட்கும் பெற்றுவளர்க்குஞ் சிரம மிராது; யமதூதர்க்கும் எனது உயிரைவாங்குகின்ற சிரமம் ஒழியு மென்பது, இங்குப் போதரும். பேதாதிபேதம் - பேத அதி பேதம் எனப் பிரிக்க: பேதமாவது - ஓரினத்திற்குள் நிகழும் வேறுபாடு; அதாவது - தேவசாதியாருள் வித்தியாதரர் யக்ஷர் கந்தர்வர் கின்னரர் என்றாற் போல்வது: இது, ஸஜாதீயபேத மெனப்படும். அதிபேதமாவது - வேறுபாடுடைய இனத்திற்குள் தோன்றும் வேறுபாடு: அதாவது - தேவர் மக்கள் விலங்கு புள் என்றாற் போல்வது: இது - விஜாதீயபேத மெனப்படும் துன்பத்துக்கு ஓராதாரம் - "துன்பத்திற்கு யாரே துணையாவார்" என்றாற் போல நின்றது. (கூசு)

97. அடையும்படிக்கோருறுதிகிட்டாமலகலிடத்தே
மிடையுஞ்சமயப்படுகுழிவீழ்ந்துமெலிந்துமன
மிடையும்பருவத்துமெய்ஞ்ஞானக்கண்டந்தெனைப்புரந்த
கடையும்படைவிழியொப்பனையாண்மனக்காதலனே.

(இ - ள்.) சமயம் படுகுழி வீழ்ந்து - புறச்சமயங்களாகிய படுகுழியிலே விழுந்து, மெலிந்து - தளர்வடைந்து, மனம் இடையும் பருவத்து - மனங் கலங்குஞ்சமயத்தில், அடையும் படிக்கு - (சிவபிரானாகிய தன்னைச்) சேர்ந்து உய்யுமாறு, ஓர் உறுதி கிட்டாமல் - ஒருபற்றுக்கோடுங் கிடைக்கப்பெறாமல, அகல் இடத்து - (நான்) விலகிப்போகக்கூடிய தருணம் நேரும்போது,— எனை புரந்த கடையும் படை விழி ஒப்பனையாள் மனம் காதலன் - என்னைப் பாதுகாத்தற்குஉரிய அராவியவேற்படைபோன்ற கண்களையுடைய ஒப்பனையம்மையின் மனவிருப்பத்திற்கு உரியவனாகிய சிவபெருமான், மெய் ஞானம் கண் தந்து - (எனக்கு) உண்மையறிவாகிய கண்ணைக் கொடுத்து, மிடையும் - (அருள்கொண்டு) நெருங்கினான்; (எ - று.)

யான் உண்மையான சற்சமயம் இதுவென்று உணராது தடுமாற்றங் கொண்டு பலவகைச்சமயங்களிலும் புகுந்து சிவபிரானாகிய பற்றுக்கோட்

டைக் கைவிட்டு உறுதிப்பொருள்கிடையாது தடுமாறி வருந்தூர்காலத்தில், காரணமின்றி யெழுந்த தனதுபெருங்கருணையினால், சிவபெருமான் எனக்கு மெய்ஞ்ஞானக்கையளித்து என்னிடத்துச்சேர்ந்தன னென்பதாம். தன்னில் அகப்பட்டார் ஈடேறுதல் அருமையாதல்பற்றி, பிறசமயத்தைப் படுகுழி யென்றார். உண்மைமையைக்காணுதற்கு ஞானமே கருவியாகநிற்றலால், அத னைக் கண் என்றல், மரபு. காதலன் மிடையும் - செய்யுமென்முற்று ஆண்பா லுக்கு வந்தது. 'மிடைந்தான்' என இறந்தகாலத்தாற் கூறவேண்டியவிடத்து நிகழ்கால எதிர்காலங்கட்குஉரிய செய்யுமென் வாய்பாட்டு முற்றாகிய 'மிடை யும்' என்ற சொல்லாற் கூறியது - இயல்பினால்வந்த காலவழுவமைதியாம்.

98. காதல்விளைத்துத்துணைசெய்தவேளுடல்கட்டழித்த
கோதமனத்திற்குறித்துக்கொலோகுலவெற்புதவு
மாதுமையொப்பனைபாலவண்ணனேநின்வடிவிலொரு
பாதிதனக்குவடிவிருப்பாகப்பறித்ததுவே.

(இ - ள்.) பால் வண்ணனே - திருக்கருவைச்சிவபெருமானே!—குலம் வெற்பு உதவும் - அஷ்டகுலாசலங்களுளொன்றாகிய இமவான் பெற்ற, மாது உமை - உமாதேவியாகிய, ஒப்பனை - ஒப்பனையம்மை,—காதல் விளைத்து - (தன்னிடத்துச் சிவபிரானுக்கு) ஆசையையுண்டாக்கி, துணைசெய்த (தனக்கு) உதவிசெய்த, வேள் - மன்மதனது, உடல் - உடம்பை, கட்டு அழித்த - (நெற்றிக்கண்ணினால்) உருக்குலைத்தறப்பற்றித் (தனக்குத்) தோன்றிய, கோ தம் - கோபத்தை, மனதில் குறித்து கொல் ஓ - தன்மனத்திற் கொண்டு தானோ, நின் வடிவில் - உனது திருமேனியில், ஒருபாதி - ஒருபாதிபாகத்தை, தனக்கு வடிவு இருப்பு ஆக - தனதுஉடம்பாக அமையுமாறு, பறித்தது - கவர் ந்துகொண்டது? (எ - று.)

உமாதேவி பிருங்கிமுனிவரால் தனக்கு நேர்ந்த அவமானத்தைப் பொறுக்கமாட்டாமல் தவஞ்செய்து சிவபிரானது திருமேனியின் ஓர்பாகத் தில் இடைவிடாது தான் உடனுறைதலைக்குறித்து, தனக்குத் துணையாக நின்று சிவபிரானுக்குக் காதலைவிளைத்த மன்மதனை அச்சிவபெருமான் எரித்து அழித்த கோபத்தால் அப்பிரானது திருமேனியிற் பாதிபாகத்தைக் கவர்ந்தன ளென வேறொருகாரணங் கற்பிததுக்கூறியது - ஏதுத்தற்குறிப்பேற்றவணி யின்பாற்படும். (இந்நூலாசிரியர் மற்றோரிடத்தில் சிவபிரானது திருமேனி பாதியாதற்குக் காரணத்தை "உறுபட்டுங் கல்லா லிருஞ்சிலையா லெற்றுண்டும், மாறுகட்டமாற்றலடியுண்டும் - ஊறுபட்ட, வாதையாலோ கருவைவாணனே பொன்மேனி, பாதியாய்த்தேய்ந்தாய் பகர்" என்று வருணித்துக்கூறுவர்.) கோதம் = க்ரோதம்; வடசொல். (கூஅ)

99. பறியாவினையைப்பறித்திலன்யாற்றிநின்பாதமன்றி
யறியாவறிவளித்தாண்டவனேயடியேனுக்குன்னைப்
பிரியாவரமன்றிவேண்டுவதில்லைபிரசமலர்
வெறியார்களாவினிழற்கீழ்நிலைபெற்றமெய்ப்பொருளே.

(இ - ள்.) பறியா வினையை - களையப்படாத [அநுபவித்தே தீரவேண்டிய] இருவினைகளையும், பறித்திலன் - தீர்த்தற்குஉரிய உபாயத்தை நாடாமல் வெறுமனே இருந்தேனுக[நான்ஒருமுயற்சியுஞ் செய்யாதிருக்கையில்],மாற்றி-(அவ்வினைகளை) ஒழித்து, நின் பாதம் அன்றி - உனது திருவடிகளையல்லாமல், அறியா - (வேறொன்றையும்) அறியாத, அறிவு - உண்மையறிவை, அளித்து-(எனக்குக்) கொடுத்து, ஆண்டவனே - (என்னை) அடிமைகொண்டவனே! பிரசம் மலர் - தேன்நிறைந்த மலர்களின், வெறி ஆர் - நறுமணம் நிறைந்த, களாவின் நிழல்கீழ் - திருக்களாமரத்தின் நிழலிலே, நிலை பெற்ற - நிலையாக எழுந்தருளியுள்ள, மெய் பொருளே - எப்போதும் அழியாத கடவுளே!— அடியேனுக்கு - (உனது) அடியவனாகிய எனக்கு, உன்னை பிறியா வரம் அன்றி - உன்னைவிட்டு நீங்காத வரமேயல்லாமல், (வேறொன்றும்), வேண்டுவது இல்லை - வேண்டாம்; (எ - று.)

உன்னைப்பிரியாது நிற்கும் வரமொன்றையே அடியேனுக்குத் தந்தருள வேண்டுமென்று சிவபிரானை வேண்டியவாறு. 'பறித்தலன்மாற்றி' என்று பாடங்கொண்டு, பறித்து - (எனதுவினைகளை) அழித்து, அ(ல்) லல் மாற்றி - (பிறவித்துன்பங்களை) ஒழித்து என்று பொருளுரைப்பாருமுளர். (கூகூ)

100. பொருள்காட்டிமாசற்றபோதமுங்காட்டியப்போதநல்கு
மருள்காட்டிச்சந்ததமானந்தங்காட்டியடர்ந்தகங்கு
லிருள்காட்டும்பூங்குழலொப்பனைபாகவிருளறுத்துத்
தெருள்காட்டிப்பாதமலர்சூட்டவென்றலைசீர்பெற்றதே.

(இ - ள்.) அடர்ந்த - நெருங்கிய, கங்குல் இருள் காட்டும் - இரவின் இருளை யொத்து மிகக்கறுத்துத்தோன்றுகின்ற, பூ குழல் - பூவையணிந்த கூந்தலையுடைய, ஒப்பனை - ஒப்பனையம்மையை, பாக - (வாம)பாகத்தி லுடையவனே!—(எனக்கு), பொருள் காட்டி - உண்மைப்பொருளை (இன்னதென்று) தெரிவித்து, மாசு அற்ற போதமும் காட்டி - (அப்பொருளையறிதற்குஉரிய) குற்றமற்ற தத்துவஞானத்தையும் உண்டாக்கி, அ போதம் நல்கும் அருள் காட்டி - அந்த நல்லறிவினாலுண்டாகின்ற (உனது) விசேஷமான கருணையையும் (என்னிடத்துத்) தோற்றுவித்து, (பிறகு), சந்ததம் ஆனந்தம் காட்டி - எப்போதும் (உன்னையே சிந்தித்தலாலாகிய) பரமானந்தத்தையும் உண்டாக்கி, இருள் அறுத்து - (அவிச்சையாகிய) இருளை அடியோடொழித்து, தெருள் காட்டி - (மனத்தில்) தெளிவை யுண்டாக்கி, பாதம் மலர் சூட்ட - (உனது) திருவடித்தாமரைமலரைச் சூட்டியதனால், என் தலை - எனது சிரசு, சீர் பெற்றது - சிறப்பை யடைந்தது; (எ - று.)

சிவபெருமான் காரணமின்றியெழுந்த தன்பெருங்கருணையால் உண்மைப்பரம்பொருளையறிவித்தல் முதலிய நல்லருட்காரியங்களை யுண்டாக்கி என்தலைமீது தனதுதிருவடிகளைப் பொறித்ததனால், எனது தலை தான் பெறுதற்குஉரிய நற்பயனைப் பெற்றுச் சிறப்படைந்த தென்பதாம். காட்டும் - உவமவுருபு. (க00)

திருக்கருவைக்கலித்துறையந்தாதி முற்றிற்று.

# செய்யுள்முதற்குறிப்பகராதி


| செய்யுள். | பக்கம். | செய்யுள். | பக்கம். | செய்யுள். | பக் |
|---|---|---|---|---|---|
| அஞ்செழுத்தோதி | ...51 | கைவிட்டுக் | ...39 | பாடுவ்துனை | .. |
| அடியேனினைவுக் | ...29 | கொடியாடும் | ...59 | பாதாரவிந்தமுஞ் | .. |
| அடைக்கில | . 47 | கொடுங்கால | ...34 | பாரிடஞ்சூழ்வர | .. |
| அடையும்படிக் | .. 87 | கொண்டாளப் | ...38 | பால்வண்ணஞ் | ... |
| அருமறையோதி | ...26 | கொழுந்தும்மை | ...28 | புகுவதுமூப்பு | . |
| அருவிப்புனலிற் | ...78 | கொறறக்கவிகை | ...64 | புண்ணிய | .. |
| அல்லும்பகலு | ...17 | கோலமெடுத்துப் | .. 49 | புரந்தரன் | .. |
| அழுக்கற்ற | ...81 | சங்கக்குழையனை | ..55 | புல்லியர்தீய | .. |
| அளியுமளி | ...10 | சதுரான | ...16 | பூண்டவராவும் | .. |
| ஆரியன் | ...65 | சிந்தித்துருகி | .. 71 | பூதகணத்தொடு | .. |
| இடங்கொண்ட | ... 6 | சீரணி | ... 5 | பெருங்காலெறிய | .. |
| இருக்கும்புராண | ...27 | சுடர்கின்ற | ...70 | பெற்றேனொருவர் | .. |
| இல்லாமைதுன்ப | ..24 | செய்யன்கரிய | .. 25 | பேதாதிபேதப் | .. |
| இழியும்பிறவிப் | ...74 | செல்வச்செருக்கர் | ...41 | பொருள்காட்டி | .. |
| இறையவனே | ...77 | தகனம்படுத்தி | ...81 | பொறியும்புலனுங் | ... |
| உணங்குந் | . 27 | தளர்வுவந | ...84 | போற்றிப்பணியு | ... |
| உத்திப்புயங்கத் | ...40 | தாளாலுதைத | ...19 | மனப்பகை | ... |
| உருவாயுருவி | ...35 | திருவுங் | ... 8 | மன்றிடத்தே | ... |
| உலகத்திலுள்ள | .71 | தீட்டும் | ... 3 | மாமலரன்றிக் | ... |
| உவராழி | ...74 | தீவினைசெய்து | ...79 | மின்கொண்ட | ... |
| உளங்தெளியும் | .. 83 | துணைக்கோல | ...76 | முகலிங்கண் | ... |
| உள்ளக்கமலத் | ...11 | தூயபங்கேருகன் | ...73 | முத்திக்கொரு | ... |
| உன்கருத்தே | .. 77 | தேசிகனுகக் | ...54 | மெலிவிக்கு | ... |
| என்செயலாவதி | ...82 | நண்ணலர் | ..86 | வண்ணங்கரிய | ... |
| எத்தியமூவர் | ...43 | நல்காதொழியினு | ...53 | வழுத்துதல் | .. |
| கடல்விட | .. 66 | நாயினுந்திய | ...57 | வாழ்த்திட | ... |
| கண்கொண்டு | ...18 | நாற்றடநதோ | ...37 | வாழ்விப்பர் | ... |
| கண்டேன் | ...23 | நின்றுள்வழுத்த | ...39 | வானவரிந்திர | .. |
| கயங்கொண்ட | ...83 | நீளமடுத்த | ...69 | விடத்தக்க | ... |
| கருத்துற | . 51 | படியிற்பிறந்து | ...52 | விண்ணிடு | ... |
| கறைகொண்ட | ...68 | பாகதிக்கே | ...31 | வேண்டிய | ... |
| காணப்பெற்றேன் | . 85 | பரஞ்சுடர் | ...62 | வேதியனே | ... |
| காதல்விளைத்துக் | ...88 | பவககடல் | ...72 | வையந்தொறுங் | ... |
| காரணனே | ...46 | பறியாவினையை | ...88 | | |

யிதணாற் கடியொடுங்கா வீர்ங்கடா யானை
யுதணாற் கடிந்தா னுளன்.

எ-து தோழி செவிலிக்கு அறத்தோடுநின்றது.

இ-ள். நறவமலரையுஞ் சுனைநீலமலரையும் அசோகமலரையும் கொய்துமுடித்து நின்மகள் குழலின்மேலே ஆராய்ந்து புனைவதுஞ்செய்து பின்னொருநாட்டணிந்து பரணாற் காவலமையாத ஈர்ங்கடா யானையை மொட்டம்பாற் கடிந்து காத்தும் இப்பெற்றி யுதவிசெய்தான் ஒருவனுளன்; எ-று. (2)

௩. ‡சாந்த மெறிந்துழுத சாரற் சிறுதினைச்
சாந்த மெறிந்த விதண்மிசைச்—சாந்தங்
கமழக் கிளிகடியுங் கார்மயி லன்னா
ளிமிழக் கிளியெழா வார்த்து.

எ-து பகற்குறிக்கண் வந்த தலைமகனைக்கண்டு தோழி சேறிப்பறிவுறீஇயது.

இ-ள். சந்தனங்களை வெட்டியுழுத சாரலின்கண் வித்திய ஏனலின்கட் படிந்த கிளிகளைச், சந்தனங்களைக் காலாகஎறிந்து செய்த பரண்மிசையிருந்து பூசிய சாந்தம் எங்கும் பரந்துகமழ உலாவிக், கடிகின்ற கார்மயிலன்னாள் தான் வாய்திறந்து ஆயோ என்றியம்புதலாற் றம்மினமென்று கிளிகள் ஆர்த்துப்போகா; எ-று.

'சாந்தமறைத்தவிதண்' என்று பாடமோதிச் சந்தனத் தழையான் மறைத்த இதண் என்பாருமுளர். (௩)

௪ $கோடாப் புகழ்மாறன் கூட லனையாளை
நலங்கெ[illegible] வடகினுங் காணேன்போர்—வாடாக்
வலங்[illegible]கொல்வேன் மன்னர் கலம்புக்க கொல்லோ
நங்[illegible] ம் பன்ற



‡ 'இது பிறரைக் காத்தற்கு இடுவரெனச் செறிப்பறிவுறீஇயது' என்றார் நச்சினார்க்கினியரும். (தொல், பொ, களவு, உ௩.)

$ இதனைப் 'பரிவுற்றுமெலியினும்' என்பதற்குதாரணங் காட்டினார் நச்சினார்க்கினியர். (பொ, கள, பொ; கஉ)

இ-ள். கோடாத புகழையுடைய மாறன் மதுரையனையாளை அடாத பண்ணையுளுங் காண்கின்றிலேன்; போரின்கண் வாடாத கருங்கொற்றொழிலையுடைய வேல்மன்னர் அணிகலமாகிய முடிகூடினகொல்லோ! இடையாற் கொம்பையனையாள் மயிர்கள்; எ-று.

ஆடாவடகு என்று விளையாட்டிற்கு வேளிப்படைநிலை யென்னும் அலங்காரத்தாற் பெயராயிற்று. அடா என்பதனை ஆடா என்று நீட்டியது. மன்னர்கலம் என்பது மன்னரணியும் மணிமுடியாதலான் முடியின் பெயராற் கூந்தற்குச் சேர்த்தி முடிகூடிற்றுக் கொல்லோ என்றதாகக்கொள்க. (௪)

௫. வினைவிளையச் செல்வம் விளைவதுபோ னீடாப்
*பனைவிளைவு நாமெண்ணப் பாத்தித்—தினைவிளைய
மையார் தடங்கண் †மயிலன்னாய் நீத்தீண்டு
கையார் பிரிவித்தல் காண்.‡

எ-து தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழிசெறிப்பறிவுறீஇயது.

இ-ள். கெடாத பனை யென்னு மளவுபோன்ற அளவினையுடைய இன்பவிளைவினை நாமெண்ணியிருப்ப அதற்கிடையூறாக, நல்வினை விளையச் செல்வம் விளைவது போலப் பாத்தியின்கட் டினைவிளைதலான், மையார் தடங்கண்மயிலன்னாய்! தினைகொய்ய நாட்சொல்லி வேங்கையார் நம்மை இங்குநின்றும் பிரிவித்தலைப் பாராய்; எ-று. (௫)

௬ பானீல மாண்ட துகிலுமிழ்வ தொத்தருவி
மானீல மால்வரை நாடகேள்—§மாநீலங்
காயும்வேற் கண்ணாள் கனையிருளி னீவர
வாயுமோ மன்றநீ யாய்.

எ-து இரவுக்குறிவேண்டிய தலைமகற்குத் தோழி மறுத்தது.

இ-ள். மிக்க நீலமணிவரை மாட்சிமைப்பட்ட வெண்டுகிலுமிழ்வது போல, அருவிகள் மயங்காநின்ற நீலமால்வரைநாடனே! கேளாய்; மலர்களை வெகுளாநின்ற வேல்போன்றகண்ணாள், செறிந்த இருளின்கண் நீவர, நினக்கிடையூறில்லாமைஆராயவல்லளோ; உண்மையாகப்பாராய்எ-று

* பனையளவு எனவும், † மடநல்லாய் எனவும் பாடம்.

‡ இஃது இவ்வொழுக்கத்தினை வேங்கை நீக்கிற்றெனத் தலைவிக்குக் கூறியது என்றார் நச்சினார்க்கினியரும். (தொல், பொ, கள, உ௩).

§ 'மானீலம்' எனவும் பாடம்.

௭ கறிவளர்பூஞ் சாரற் கைந்நாகம் பார்த்து
நெறிவளர் நீள்வேங்கை கொட்கு—முறிவளர்
நன்மலை நாட விரவரின் வாழாளா
ளன்மலை நாடன் மகள்.

இதுவுமது.

இ-ள். மிளகு படர்கின்ற பூஞ்சாரலின்கட் கையையுடைய நாகங்களைப்பார்த்து வழியின்கண் வளர்கின்ற பெரும்புலிகள் திரிதரும் இரவின்கண் நீவிரிற், றளிர்வளர்கின்ற நன்மலைநாட! நன்மலைநாடன்மகள் வாழாள்;எ-று.

௮ அவட்காயி னைவனங் காவ லமைந்த
திவட்காயிற் செந்தினைகா ரேன—லிவட்காயி
னெண்ணுளவா லைந்திரண் டீத்தான்கொ லென்னுங்கொல்
கண்ணுளவாற் காமன் கணை.

எ-து பின்னிலைமுனியாது நின்ற தலைமகன் றோழியை மதியுடம்படுத்தது.

இ-ள். அவ்விடத்து வருவேனாயின் நினக்கு ஐவனங்காவலமைந்தது; இவ்விடத்தின்கண் வருவேனாயிற் செந்தினையுஞ் செறிந்த பசுந்தினையுங் காத்தலே அமைந்தது; ஆதலான் எனக்கொரு மறுமாற்றந் தருகின்றிலை; நின்றோழியாகிய இவட்காயிற், காமன் அம்பு ஐந்தெண்ணுளவால், அவற்றுளிரண்டம்பினைக் கண்ணாகக்கொடுத்தான் கொல்லோ! நின்றோழிக்குக் கண்கள் காமன்கணை யுளவால், என்னுயிர்க்கு என்னாங் கொல்லோ? எ-று.

[illegible] யென்னும் வகைத்தாலோர் மாவினைத்
[illegible] தமியனாய்ச் சென்றேனென்—னெஞ்சை
நலங்கொண்டார் பூங்குழலா ளன்றையத் தன்றென்
வலங்கொண்டாள் கொண்டா ளிடம்.

எ-து பாங்கற்குத் தலைமகன் றலைமகளைக் கண்டவகைகூறித் தன்னுற்றமைதி சொல்லியது.

இ-ள். மாயமே யென்று சொல்லப்படுந் தன்மைத்தால்! ஒருமாவினை வினவி யானினைவினை நீங்கித் தனியே எளியேனாய்ச் சென்றேன்: சென்றவிடத்து நலங்கொண்டு நிறைந்த பூங்குழலையுடையாள் மிகவுந் தன்னையத்தின்கண் அன்று என் வென்றியை யெல்லாங் கொண்டு என்னெஞ்சத்தைத் தனக்கிடமாய்க் கொண்டாள்; எ-று. (௯)

௧௦ கருவிரற் செம்முக வெண்பற் சூன் மந்தி
பருவிரலாற் பைஞ்சுனைநீர் தூஉய்ப்—பெருவரைமேற்
றேன்றேவர்க் கொக்கு மலைநாட வாரலோ
வான்றேவர் கொட்கும் வழி

எ-து தோழி நெறிவிலக்கியது.

இ-ள். கருவிரலினையுஞ் செம்முகத்தினையும் வெண்பல்லினையுமுடை யசூன்மந்தி தன் பெரியவிரலானே பைஞ்சுனையினீரைத் தூவிப், பெருவரை யின்மேலே வைத்த தேன்பொதிகளைத் தேவர்கட்குக் கொடுக்கும் மலை நாடனே! வாராதொழிவாயாக; தேவர்கள் திரிதரும் வழியாம்; எ-று. (௧௦)

௧௧ கரவில் வளமலைக் கல்லருவி நாட
வரவில் வலியா யொருநீ—யிரவின்
வழிகடாஞ் சால வரவரிய வார
விழிகடா யானை யெதிர்.

இதுவுமது.

இ-ள். பழுதில்லாத வளங்களையுடைய கல்லருவி நாடனே! வலிய வில்லே நினக்கு வலியாய் ஒருநீ இரவின்கண்ணாகத் துணையின்றி வழிகள் தாம் மிகவும் வரவரிய; இழியாநின்ற கடாத்தையுடைய யானைகளி னெதிர் வாரல்; எ-று. (௧௧)

௧௨ வேலனார் போக மறிவிடுக்க வேரியும்
பாலனார்க் கீக பழியிலாள்—பாலாற்
கடும்புனலி னீந்திக் கரைவைத்தாற் கல்லா
னெடும்பணைபோ றோணேரா ணின்று.

எ-து வெறிவிலக்கித் தோழி செவிலிக்கு *

இ-ள். வெறியை விட்டு வேலனார் போக; மறியையும் விடுக்க; கள்ளை யும் அக்கள்ளினை நுகர்வார்க்கீக; இப்பழியிலாதாள் ஊழ்வலியாற் கடும்புன லுட் பாய்ந்து நீந்தித் தன்னை யெடுத்துக் கரையின்கண் வைத்தாற்கல்லது நெடிய வேய்போன்ற தோளை நல்காள் இறந்துநின்று; எ-று. (௧௨)

* 'ஒண்ணிணப்பலி யொக்குவல்' என்பது திருச்சிற்றம்பலக் கோவை. (உ௩௫.)

கங. ஒருவரை போலெங்கும் பல்வரையுஞ் சூழ்ந்த
வருவரை யுள்ளதாஞ் சீறூர்—வருவரையு
ளைவாய நாகம் புறமெல்லா மாயுங்காற்
கைவாய நாகஞ்சேர் காடு.

எ-து நெறியினதருமை கூறித் தோழி இரவுக்குறிமறுத்தது.

இ-ள். ஒரு மலைபோல எல்லா மலையும் தம்முள் அளவொக்க உயர்ந்து சூழ்ந்த அரிய எல்லையுள் உள்ளதாம் எங்கள் சீறூர்; நீவரும் அவ்வெல்லையுள் உள்ளகத்தின்கண் உள்ளன ஐந்துவாயையுடைய நாகங்கள்; புறத்துள்ளன ஆராயுங்காற் கையொடுசேர்ந்த வாயையுடைய யானைகள் சேர்ந்தகாடுகள்; எ-று. (கங)

கச வருக்கை வளமலையுண் மாதரும் யானு
மிருக்கை யிதண்மேலே மாகப்—பருக்கைக்
கடாஅமால் யானை கடிந்தானை யல்லாற்
றொடாஅவா லென்றோழி தோள்.

எ-து. செவிலிக்குத் தோழி அறத்தோடுநின்றது.

இ-ள். வருக்கைப் பலாவினையுடைய வளமலையின்கண் மாதரும் யானும் எமக்கிருக்கையாகிய பரண்மேலேயிருந்தேமாகப், பெரிய கையினையுங் கடாத்தையும் பெருமையையும் உடைய யானையைத் துரந்து கடிந்தானையன்றித் தீண்டாவால், என்றோழியுடைய தோள்கள்; எ-று. (கச)

கரு வாடாத சான்றோர் வரவெதிர் கொண்டிராய்க்
கோடாது நீர்கொடுப்பி னல்லது—கோடா
வெழிலு முலையு மிரண்டிற்கு முந்நீர்ப்
பொழிலும் விலையாமோ போந்து.‡

எ-து தலைமகன் சான்றோரை வரைவுவேண்டி விடுத்தவிடத்துத் தலைமகள்தந்தைக்குந் தனையன்மார்க்கும் நற்றாய் அறத்தோடுநின்றது.

இ-ள். தள்ளாத சான்றாண்மையையுடையார் வரவை எதிர்கொண்டிராய்க் கோடாது உடம்பட்டு நீர் கொடுப்பினன்றித் தளராத அழகும் முலையும் என்னும் இரண்டிற்கும் முந்நீரால் சூழப்பட்டவுலகும் விலையாமோ நிரம்பி; எ-று. (கரு)

---

‡ இதுவும் உசாதலாயடங்கும் என்பர் நச்சினார்க்கினியர். (தொல். பொ. பொருளி. கரு)

கசு நாணுக நாறு நனைகுழலா ணல்கித்தன்
பூணுக நேர்வளவும் போகாது—பூணுக
மென்றே னிரண்டாவ துண்டோ மடன்மாமே
னின்றேன் மறுகிடையே நேர்ந்து.

எ-து தோழி சேட்படுத்தவிடத்துத் தலைமகன்றனதாற்றாமையாற்சொல்லியது.

இ-ள். நாகநாண்மலர்நாறும் தேனால் நனையப்பட்ட குழலாள் எனக்கு நல்கித் தன்னுடைய பூண்மார்பினை நேருமளவும் என் மார்பினின்றும் அவ்வெலும்பாற் செய்த பூண்போகாதென்று நினக்குச் சொல்லினேன்; இனியிரண்டாவது வேறொரு சொல்லுண்டோ? பனைமடலாற் செய்யப்பட்ட மாவினையூரத்துணிந்துநின்றேன், தெருவினடுவேயுடன்பட்டு; எ-று. (கசு)

கஎ அறிகவளை யைய விடைமடவா யாயச்
சிறிதவள்செல் லாளிறுமென் றஞ்சிச்—சிறிதவ
ணல்கும்வாய் காணாது நைந்துருகி யென்னெஞ்ச
மொல்கும்வா யொல்க லுறும்.

எ-து நின்னுற் சொல்லப்பட்டவளை அறியேனுலோ என்ற தோழிக்குத் தலைமகனறிய வுரைத்தது.†

இ-ள். அறிவேன் யான் அவளை; தன்னுடைய மெல்லிய இடைவருந்த, மடவாய்! சிறிதுமவள் நடவாளாக இறும்இறும் என்றஞ்சி அவள் எனக்குச் சிறிதும் அருளுநெறிகாணாது தளர்ந்துருகி என்னெஞ்சம் அவளொல்கி நடக்குந்தோறும் பின்சென்று தளர்தலுறும்; எ-று.

இதனுள் ஆய என்பது வருந்த என்றதாம். (கஎ)

கஅ என்னுங்கொ லீடி ‡லிளவேங்கை நாளுரைப்பப்
பொன்னும்போர் வேலவர் தாம்புரிந்த—தென்னே
மருவியா மாலை மலைநாடன் கேண்மை
யிருவியா மேன லினி.$

* இது சாக்காடு குறித்தது எனக்கொள்வர் நச்சினார்க்கினியர். (தொல். பொ, களை, கக)

† நச்சினார்க்கினியரும் இதுவே கருத்தாகக்கொள்வர். (தொல், பொ, களை, கக)

‡ 'இணைவேங்கை' எனவும் பாடம்.

$ இது தினையரிகின்றமையுஞ் சுற்றத்தார் பொருள்வேட்கையுங் கூறியது என்பர் நச்சினார்க்கினியர். (தொல். பொ. களை- உ௩)

எ-து பகற்குறிக்கட் டலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

இ-ள். தகுதியில்லாத இளவேங்கை நாட்சொல்ல இனிக்குரலொழிந்து இருவியாய்க் கழியுந்தினையெல்லாம்; எந்தையும் என்னையன்மாருமாகிய போர்வேலவர் இவட்குப் பரிசமாக மிகவிரும்புகின்றது பொன்னும்; ஆதலாற் பயிலப்பழகிவருந்தன்மையையுடைய மலைநாடன்கேண்மை யினியென்னாய விளையுங்கொல்லோ! என்னே! எ-று. (கஅ)

கசு பாலொத்த வெள்ளருவி பாய்ந்தாடிப் பல்பூப்பெய்
தாலொத்த வைவனங் காப்பாள்கண்—வேலொத்தென்
னெஞ்சரம்வாய்ப் புக்கொழிவு காண்பானோ காண்கொடா
வஞ்ராயற் கேநோவல் யான்.*

எ-து பின்னின்ற தலைமகன் தோழி குறைமறுமற் றனதாற்றாமைமீதூர்ந்து சொல்லியது.

இ-ள். பால்போன்ற வெள்ளருவியைப் பாய்ந்தாடிப், பலபூக்களையும் பெய்து பரப்பினாற்போலப் பூங்கொடிகள் படர்ந்த ஐவனப்புனத்தைக் காப்பாள் கண்கள், வேல்போன்று எனது நெஞ்சத்தின்கண் வாவிப்புக்கு என்னுயிரை ஒழிவுகாணவேண்டுமோ புறம்போகாது உள்ளே அடங்கின; இத்துணை வேண்டுமோ? அவளுடைய அழகிய மேனிக்கே நோவாநின்றேன் யான்; எ-று. (கசு)

உ0 நாள்வேங்கை பொன்விளைப்பு நன்மலை நன்னாட [வேங்கை
கோள்வேங்கை போற்கொடியா ரென்னையன்மார்—கோள்
யன்னையா னீயு மருந்தழையா மேலாமைக்
கென்னையோ நாளை யெளிது.‡

எ-து கையுறைமறை.

இ-ள். வேங்கை நாண்மலர் பொன்விளைவிக்கும் நன்மலைநாடனே! கோள்வேங்கைபோற் கொடியார் என் ஐயன்மார்; நீயுங் கோள்வேங்கையனையையாதலான் இன்று நீயும் இங்கே நிற்கின் மிகப்போர் விளையும்; நீ கொணர்ந்த தழையை யாங்கொள்ளாமைக்கு வேறு காரண மென்னை? நாளை நீ கொண்டு வந்தால் எளிது; எ-று. (உ0)

* இது பகற்குறியிடத்தது எனக்கொள்வர் நச்சினார்க்கினியர். (தொல் பொ. கள. கக)

‡ இது கையுறை மறுத்துப் பின்வருக என்றது என்றார் நச்சினார்க்கினியரும். (தொல். பொ. கள. உக.)

## குறிஞ்சி.

உக. பொன்மெலியு மேனியாள் பூஞ்சுணங்கு மென்முலைக
ளென்மெலிய வீங்கினவே பாவமென்—றென்மெலிவிற்
கண்கண்ணி வாடாமை யானல்ல வென்றூற்று
ளுண்கண்ணி வாடா ளுடன்று.

எ-து ஆற்றுறைய தலைமகனைத் தோழி ஏற்றுகோண்டு கையுறையெதிர்ந்தது.

இ-ள். பொன்றளரும் மேனியாள் வேங்கைப்பூப்போன்ற சுணங்கினையுடைய மென்முலைகள் எற்றுக்கு யான்மெலியப் புடைத்து வீங்கின, என்னே பாவமென்று சொல்லி நீ மெலிதற்குக் காரணமென்னை? நீ கொணர்ந்த குறுங்கண்ணிகள் வாடாதவகை யான் கொண்டு சென்று இவை நல்ல என்று காட்டினுல், அவ்வுண்கண்ணிதான் மாறுபட்டுத் துன்புறுள் வாங்கும்; எ-று. (உக)

உஉ. கொல்யானை வெண்மருப்புங் கொல்வல் புலியதளு
நல்யானை நின்னையர் கூட்டுண்டு—செல்வார்தா
மோரம்பி னெய்து போக்குவர்யான் போகாம
லீரம்பி னெலெய்தா யின்று. *

எ-து பகற்குறிக்கட் டலைமகள் குறிப்பன்றிச் சார்கிலாத தலைமகன் றாதாற்றாமை சொல்லியது.

இ-ள். கொல்யானைகளினுடைய வெண்மருப்பையுங் கொலைவல்ல புலித்தோல்களையும் நல்யானை போன்ற நின் ஐயர் திறைகொண்டொழுகுவார், இப்புனத்தினகட் பிறர் வருவாரை ஓரம்பினலெய்து போக்குவர்; யான் பிழைத்துப் போகாதவகை நின் கண்ணென்னு மிரண்டம்பினல் எய்தாய் இன்று; எ-று. (உஉ)

உரு. பெருமலை தாநாடித் தேன்றுய்த்துப் பேணு
தருமலை மாய்க்குமவர் தங்கை—திருமுலைக்கு
நாணழிந்து நல்ல நலனழிந்து நைந்துருகி
யேணழிதற் கியாமே யினம்.

எ-து நின்னுற் குறிக்கப்பட்டாளை யானறியேனென்ற தோழிக்குத் தலைமகன் கூறியது: பாங்கற்குக் கூறியதூஉமாம்.

---

* இஃது 'இடம் பெற்றுத்தழாஅல்' என்பர் நச்சினுர்க்கினியர். (தொல். பொ. கஎ. கக)

இ-ள். பெருமலையெங்கும் தாம்புக்குநாடித் தேன்வாங்கி நுகர்ந்து மனத்தின்கண் ணுடங்கிப் பாதுகாவாது அருமலைபோன்றிருந்த யானைகளைப்பிணித்துக்கொள்வாருடைய தங்கையுடைய திருமுலைக்குத்தோற்று நாணழிந்து மிக்க அறிவு முதலாயின குணங்கள் நான்குமழிந்து தளர்ந்துருகி வலியழிதற்கு யாமமைமதேம்; எ-று. (உ௩)

உ௪ நறுந்தண் டகரம் வகுள மிவற்றை
வெறும்புதல்போல் * வேண்டாது வேண்டி—யெறிந்துழுது
செந்தினை வித்துவார் † தங்கை பிறர்நோய்க்கு
நொந்தினைய வல்லளோ நோக்கு.

எ-து தோழி துறைமாறுமற் றலைமகள் றனதாற்றமைமிகுதி சொல்லியது.

இ-ள். நறுவிய குளிர்ந்த தகரம், வகுளம் என்னுமிவற்றைப் பயன்படாத வெறும்புதல்போல விரும்பாது வெட்டியுழுது, விரும்பிச் செந்தினையை வித்துவார் தங்கை பிறர்கொண்ட நோய்க்கு நொந்திரங்க வல்லளோ? ஆராய்ந்து பாராய் தோழி; எ-று. (உ௪)

உ௫ கொல்லியல் வேழங் குயவரி கோட்பிழைத்து
நல்லியற் றம்மின நாடுவபோ—னல்லிய
ளுமவேற் கண்ணு ணடுநடுப்ப வாரலோ
வேமவே லேந்தி யிரா.

எ-து தோழி தலைமகனை நெறிவிலக்கி வரைவுகடாயது.

இ-ள். கொல்லும் இயல்பினையுடைய யானைகள் புலியினாற் கொல்லப்படுதலைத் தப்பி மிக்க இயல்பினையுடைய தங்கூட்டத்தைத் தேடுவதுபோலும்; ஆதலான் மிக்கவியல்பினையுடைய அச்சத்தைச் செய்யாநின்ற வேல்போன்ற கண்ணுள் நடுநடுங்கும்வகை வாராதொழிவாயாக, அரணுகிய நின் வேலையேந்தி இரவின்கண்; எ-று. (உ௫)

உ௬ கருங்கா லினவேங்கை கான்றபூக் கன்மே
லிருங்கால் வயவேங்கை யேய்க்கு—மருங்கான்

* வேண்டாது எறிந்துழுது, வேண்டிவித்துவார் என்க.

† இது தலைவியைப் பேதைமையூட்டியது எனக்கொள்வர் நச்சினார்க்கினியர். (தொல். கள. உ௩)

மழைவளருஞ் சார லிரவரின் வாழா
ளிழைவளருஞ் சாய லினி.

இதுவுமது.

இ-ள். கருங்காலினையுடைய இனவேங்கை கன்மேலுகுத்த பூக்கள் பெரியதாளினையுடைய வயப்புலியை யொக்கின்ற மருங்கான்மழைவளருஞ் சாரலானே இரவின்கண் நீ வரின் உயிர்வாழமாட்டாள், இழைவளருஞ் சாயலாள்; எ-று. (உசு)

உஎ பனிவரைநீள் வேங்கைப் பயமலைநன் னாட
வினிவரையா யென்றெண்ணிச் சொல்வேன்—முனிவரையு
ணின்றாள் வலியாக நீவர யாய்கண்டா
ளொன்றாள்காப் பீயு முடன்று.

எ-து தோழி படைத்துமொழிகிளவியால் வரைவுகடாயது.

இ-ள். குளிர்ந்த குவடுகளையும் நீண்ட வேங்கைமரங்களையும் உடைய பயமலை நாடனே! இதற்குமுன்பு வரைந்திலையாயினும் இனி வரைந்துபுகுதாய் என்று நினக்கு ஆராய்ந்து சொல்வேன்; வெறுக்கத்தக்க மலையின்கண் நின்தாளாண்மையே வலியாக இரவின்கண் நீவர எம் அன்னை கண்டாள்; இனி எங்களோடு பகைத்து வெகுண்டு மிக்க காவலை எமக்குத்தரும்; எ-று.

உஅ மேகந்தோய் சாந்தம் விரைதிமிசு காழகி
னாகந்தோய் நாக மெனவிவற்றைப்—போக
வெறிந்துழுவார் தங்கை யிருந்தடங்கண் கண்டு
மறிந்துழல்வா னேவிம் மலை.

எ-து தலைமகன் சொன்ன குறிவழியேசென்று தலைமகனைக்கண்டு பாங்கன் சொல்லியது.

இ-ள். முகிலைத் தோயாநின்ற சந்தனமும், விரைமரமும், திமிசும், காழகிலும், துறக்கத்தைச் சென்று தோயாநின்ற நாகமரமும் என்று சொல்லப்பட்ட இவையெல்லாம் போக வெட்டிப் புனமுழுவார் தங்கையாகிய இவளுடைய இருந்தடங்கண் கண்டுவைத்தும், இங்குநின்றும் மீண்டு அங்கு வர வல்லஎம்பெருமான் இத்தோன்றுகின்றமலைபோல் நிலையுடையன்; எ-று.

உகூ பலாவெழுந்த பால்வருக்கைப் பாத்தி யதனோர்
நிலாவெழுந்த வார்மணை னீடிச்—சுலாவெழுந்து

கான்யாறு கால்சீத்த காந்தளம்பூந் தண்பொதும்பர்
தானுறத் தாழ்ந்த விடம்.

எ-து பகற்குறிக்கண் இடங்காட்டியது.

இ-ள். பலாவெழுந்த மருங்கின்கண் வருக்கைப்பலாக்களாற் பக்க பட்டதனடுவே நிலாவொளி மிக்க ஒழுகிய மணலுயர்ந்து வளைந்து தோ றிக், கான்யாறுகள்இடங்களெல்லாஞ்சீத்த காந்தளம்பூந் தண்பொதும்ப தான்விரைகமழ்ந்து தழைத்தவிடம், யாங்கள் பகலின்கண் விளையாடுமிடம் எ-று. (உக

கூ0 திங்களுள் வில்லெழுதித் தேராது வேல்விலக்கித்
தங்களு ளாளொன்னுந் தாழ்விஞு—லிங்கட்
புனங்காக்க வைத்தார்போற் பூங்குழலைப் போந்தென்
மனங்காக்க வைத்தார் மருண்டு.

எ-து பாங்கற்குத் தலைமகன் கூறியது.

இ-ள். ஒரு நிறைமதியின்கண்ணே இரண்டு வில்லை எழுதிப் பிறருட் ரையுண்ணுமென்று ஆராயாது இரண்டு வேலினையழுத்தித், தங்கள் குலத் துள்ளாளொருத்தி யென்று தாங்கள் கருதப்படுந் தாழ்வு காரணத்தால் இவ் விடத்தின்கட் டினைப்புனத்தைக் காக்க வைத்தார்போலப் பூங்கொடியை என் மனத்தைப்போந்து காக்கவைத்தார், அறிவின்றி; எ-று. (கூ0)

கூக தன்குறைபி தென்ஞன் றழைகொணருந் தண்சிலம்ப
னின்குறை யென்னு நினைப்பினனாய்ப்—பொன்குறையு
நாள்வேங்கை நீழலு ணண்ணு னெவன்கொலோ
கோள்வேங்கை யன்னான் குறிப்பு.

எ-து தோழி தலைமகளை மெலிதாகச் சொல்லிக் குறைநயப்பக் கூறி யது.

இ-ள். தன்காரியம் இது என்று எனக்கு விளங்கச் சொல்லான், தழை யைக்கொண்டுவந்தான், தண்சிலம்பையுடையான் நின்னுன் முடியுங் கருமம் இது என்னுங் கருத்தினனாய்ப் பொன்னிறந்தளரும் நாண்மலர்களையுடைய வேங்கை நீழலின்கண்ணுஞ் சிறிதுபொழுதுஞ் சார்ந்திரான், என்னைகொல் லோ! கோள்வேங்கையன்னானது கருத்து; எ-று. (கூக)

குறிஞ்சி முற்றியது.

# உ.—நெய்தல்.

௩௨ பானலந் தண்கழிப் பாடறிந்து தன்னைமார்
நூனல நுண்வலையா னொண்டெடுத்த—கானற்
படுபுலால் காப்பாள் படைநெடுங்கண் ணோக்கங்
கடிபொல்லா வென்னையே காப்பு.

எ-து பாங்கற்குச் சொல்லியது.

இ-ள். நெய்தற்பூக்களையுடையதண்கழியின்கண் மீன்பாட்டையறிந்து தன்னைமார் நூலாற் செய்யப்பட்ட நல்ல நுண்ணிய வலையான் முகந்தெடுத்த படுபுலாலைக் கானலின்கணிருந்து காப்பாள் படைநெடுங்கண் ணோக்கம் படுபுலாலைக் காக்கமாட்டா, என்னையே காக்கும் அத்துணை; எ-று. (௧)

௩௩. பெருங்கடல் வெண்சங்கு காரணமாப் பேணா
திருங்கடன் மூழ்குவார் தங்கை—யிருங்கடலுண்
முத்தன்ன வெண்முறுவல கண்டுருகி நைவார்க்கே
யொத்தனம் யாமே யுளம்.

இதுவுமது.

இ-ள். பெருங்கடலுள் வெண்சங்கு பெறுதலே காரணமாகத் தங்களுயிரைப் பாதுகாவாது பெருங்கடலினுள்ளே குளிப்பார் தங்கையுடைய இருங்கடலின்முத்தன்ன வெண்முறுவல் கண்டுருகி நைவார்க்கே பொருந்தி யாம் மேவியுளம்; எ-று. (௨)

௩௪. தாமரை தான்முகமாத் தண்ணடையீர் மாநீலங்
காமர்கண் ணாகக் கழிதுயிற்றுங்—காமருசீர்த்
தண்பரப்ப பாயிரு ணீவரிற் றாழ் கோதையாள்
கண்பரப்ப காணீர் கசிந்து.

எ-து புணர்ந்து நீங்குந் தலைமகனைக் கண்ணுற்றுநின்ற தோழி வரைவு கடாயது.

இ-ள். தாமரை மலர்கள் தாமே முகமாகக் குளிர்ந்த இலையையுடைய ஈரத்தையுடைய மாநீலமலர்கள் காதலிக்கப்படுங் கண்ணாக, அக்கண்களைக் கழிக்கட்டுயில்வியாநின்ற காமருசீர்த் தண்பரப்பையுடையானே! பெரிய இருளின்கண் நீவரிற் றாழ்ந்த கோதையையுடையாள் இரங்கி அவள் கண்கள் நீர்பரப்ப காணாய்; எ-று. (௩)

கரு. புலாலகற்றும் பூம்புன்னைப் பொங்குநீர்ச் சேர்ப்ப
நிலாவகற்றும் வெண்மணற்றண் கானற்—சுலாவகற்றிக்
கங்குனீ வாரல் பகல்வரின்மாக் கவ்வையா
மங்குனீர் வெண்டிரையின் மாட்டு.

எ-து இரவும் பகலும் வாரலேன்று தலைமகனைத் தோழி வரைவு கடாயது.

இ-ள். புலானாற்றத்தை நீக்கும் பூக்களையுடைய புன்னைப் பொங்கு நீர்ச்சேர்ப்பனே! நிலாவினதொளியை வென்று நீக்கும் வெண்மணற்றண் கானலின்கட் கங்குலின்கண்ணே வருதலின் இவளாவி வருந்தலைப் பெருக்கி நீ வாராதொழிக; பகல்வருவையாயிற் பிறரால் அலர்தூற்றப்படுங் கவ்வை பெருகும், மங்குல் போன்ற நீரையும் வெண்டிரையையுமுடைய கடன் மருங்கின்; எ-று. (ச)

கசு. முருகுவாய் முட்டாழை நீண்முகைபார்ப் பென்றே
குருகுவாய்ப் பெய்திரை கொள்ளா—துருகிமிக
வின்னா வெயில்சிற காண்மறைக்குஞ் சேர்பபநீ
மன்னா வரவு மற.

எ-து தோழி வரைவுகடாயது.

இ-ள். விரைவாய்த்த முட்டாழையினது நீண்முகையைக் குஞ்சு என்றுகருதிக் குருகுகள் அம்முகைவாயிலே இரையைப்பெய்து தம் அவ்விரையைக்கொள்ளாதுருகி மிகவின்னாத வெயிலைத் தஞ்சிறகான் மறைக்குஞ் சேர்ப்பையுடையானே! நீ இங்குவரும் நிலையாத வரவினை மறந்து நிலைக்கும்வரவினைச் செய்வாயாக; எ-று. (ரு)

கஎ. ஓதநீர் வேலி யுரைகடியாப் பாக்கத்தார்க்
காதனீர் வாராமை கண்ணோக்கி—போதநீ
ரன்றறியு மாதலால் வாரா தலரொழிய
மன்றறியக் கொள்ளீர் வரைந்து.

இதுவுமது.

இ-ள். ஓதநீர் வேலியையுடைய பாக்கத்தார் உரையாற் கடியாது உம்மேலுள்ள காதலாற்றுன்புற்று இவள் கண்கள் நீர்வாராதவகை இவண் மாட்டு வேறுபாட்டைப்பார்த்து முன்பு நீரவட்குச்சொல்லிய வஞ்சினத்தை

ஒதநீரறியுமாதலான், இவ்வாறு வாராது அலரொழியும்வகை மன்றத்தா ரறிய வரைந்து கொள்ளீர்; எ-று. (சு)

௫அ. மாக்கடல்சேர் வெண்மணற் றண்கானற் பாய்திரைசேர்
மாக்கடல்சேர் தண்பரப்பன் மார்பணங்கா—மாக்கடலே
யென்போலத் துஞ்சா யிதுசெய்தார் யாருரையா
யென்போலுந் துன்ப நினக்கு.

எ-து காமமிக்க கழிபடர்கிளவி.

இ-ள். பெருங்கடலினுனே வந்து சேர்ந்த வெண்மணற் றண்கான லின்கண் வந்து பரவாநின்ற திரைசேர்ந்த மாக்கடலைச்சேர்ந்த தண்பரப் பினையுடையான் மார்பினுன் வருத்தப்படாத பெருங்கடலே! என்னைப் போலக் கண்டுஞ்சு கின்றிலை; இக்கண்டுஞ்சாமையைச் செயகின்ற என் போலுந் துன்பத்தை நினக்குச் செய்தார் யாவர் சொல்லாய்? எ-று. (எ)

௫௯. தந்தார்க்கே யாமாற் றடமென்றோ ளின்னநாள்
வந்தார்க்கே யாமென்பார் வாய்காண்பாம்—வந்தார்க்கே
காவா விளமணற் றண்கழிக் கானல்வாய்ப்
பூவா விளஞாழற் போது.

எ-து நோதுமலர் வரைந்து புகுந்த பருவத்துத் தோழி செவிலிக்கறத் தொடுநின்றது.

இ-ள். வந்து சேர்ந்தார்க்கு எமமாம் இளமணற் றண்கழிக் கானலி டத்து வந்து, முன்பு பூவாதேபூத்த இளஞாழற்பூவினை இவட்குத் தந்தவர் க்கேயாமால், இவள் தடமென்றோள்; இந்நாள் வதுவைவரையப் புகுந்தார் க்காமென்பாருடைய மெய்யுரையைக் காண்பாம்; எ-று. (அ)

சo. தன்றுணையோ டாடு மலவனையுந் தானோக்கா
வின்றுணையோ டாட வியையுமோ—வின்றுணையோ
டாடினாய் நீயாயி னந்நோய்க்கென் னெஞ்சென்று
போயினான் சென்றான் புரிந்து.

எ-து வலிதாகச் சொல்லித் துறைநயப்பித்தது.

இ-ள். தன்பெடைஞெண்டொடு இன்புற்று விளையாடும் அலவனையும் என்னையும் பார்த்து, 'என்னுடைய இனியதுணையோடு இப்பெற்றிபோல ஆட எனக்குக்கூடுமோ? நின்னுடைய இன்றுணையாகிய பெடைஞெண்டொ

னே விளையாடினாய் நீயாயிற் பிரிவத்துன்பம் அறியாயாதலான், அப்பெற்றிப் பட்ட நினக்கு என்பிரிவுத்துன்பத்தைச் சொல்லி நொந்து என்னை' என்று சொல்லிப்போயினவன் பின்னைவந்து மேவித் தோன்றுகின்றிலன், என் செய்தானோ! எ-று. (கூ)

சக உருகுமா லுள்ள மொருநாளு மன்றூற்
பெருகுமா னம்மலர் பேணப்—பெருகா
வொருங்குவான் மின்னோ டுருமுடைத்தாய்ப் பெய்வா
னெருங்குவான் போல நெகிழ்ந்து.

எ-து தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழியாற் சொல்லெடுக்கப்பட்டுத் தலைமகள் தனதாற்றாமையாற் சொல்லியது.

இ-ள். ஒருங்கு பெருகி வாலிய மின்னோடு உருமுடைத்தாகிப் பெய்ய வேண்டி நெருங்குகின்ற மழைபோலப் பெருகாநின்றது, எதிலார் விரும்பும்படி நம்மலரானது; ஆதலான் நம்முள்ளம் ஒருநாளுமின்றியே பலநாளும் நெகிழ்ந்துருகாநின்றது; எ-று. (சo)

சஉ *கவளக் களிப்பியன்மால் யானைசிற் றாளி
தவழ்ந்தா னில்லா ததுபோற்—பவளக்
கடிகை யிடைமுத்தங் காண்டொறு நில்லா
தொடிகை யிடைமுத்தந் தொக்கு.

எ-து நயப்பு: கையுறையுமாம்.

இ-ள். கவளத்தையுடைய களிப்பியன்ற மால்யானை, அரிமாவின் குருளை தான் நடைகற்கும்பருவத்தும் அஞ்சி யெதிர்நில்லாததுபோல, இவளுடைய அதரமாகிய பவழத்துண்டத்தினிடையரும்பும் முறுவலாகிய முத்தங்களைக் காணுந்தோறுந்தோற்றுநில்லா, இவள் கையிடைத்தொடியின்கண் அழுத்திய முத்தங்கள் திரண்டு; எ-று. (கக)

சங கடறகோ டுருமருப்புக் கால்பாக னுக
வடற்கோட் டியானை திரையா—வுடற்றிக்
கரைபாய்நீள் சேர்ப்ப கனையிருள் வாரல்
வரைவாய்நீ யாகவே வா.

---

* நச்சினார்க்கினியர் இதனைக் கையுறைகொண்டுவந்து கூறியதாகக் கொண்டு, இதன்கண் "நின்வாயிதழையும் எயிற்றையும் காணுந்தோறும் நில்லா, என் கையிடத்தில் இருக்கின்ற பவளக்கொடியும் முத்தும் என்க" என வுரைப்பர். (தொல். பொ. களா. கக.)

எ-து. தலைமகனைத் தோழி வரைவுகடாயது.

இ-ள். கடலின்கட் சங்குகளே பெரியமருப்பாகக் காற்றே பாகனாகத் திரையே அடற்கோட்டியானையாக வருத்திக் கரையைக் குத்துகின்ற நீண்ட சேர்ப்பையுடையானே! செறிந்த இருளின்கண் வாராதொழிக ... (எ-று)

சச கடும்புலால் புன்னை கடியுந் துறைவ
படும்புலாற் புட்கடிவான் புக்க—தடம்புலாந்
தாழைமா ஞாழற் றதைந்துயர்ந்த தாழ்பொழி
லேழைமா னோக்கி யிடம்.

எ-து பகற்குறியிடங்காட்டியது.

இ-ள். மிக்கபுலானாற்றத்தைப் புன்னைப்பூக்கள் நீக்குந் துறைவனே! புலாலிற்பட்ட புள்ளைக்கடியவேண்டிப் புக்கவழைமானோக்கிவிளையாடுமிடம், பெரியபுல்லாகிய தாழையும் ஞாழலும் நெருங்கியுயர்ந்ததாழ்பொழில்; எ-று.

சரு தாழை தவழ்ந்துலாம் வெண்மணற் றண்கானன்
மாழை நுளையர் மடமக—ளேழை
யிணைநாடி லில்லா விருந்தடங்கண் கண்டுந்
துணைநாடி னன்றே யிலன்.

எ-து தலைமகன் சொல்லிய குறிவழியறிந்து தலைமகளைக்கண்ட பாங்கன் தலைமகனை வியந்து சொல்லியது.

இ-ள். தாழைகள் படர்ந்து பரக்கும் வெண்மணலையுடைய தண்கானலின்கண் வாழும் மாழைமையையுடைய நுளையர்மடமகளாகிய இவ்வேழையுடைய ஒப்புவமை நாடிலில்லாத இருந்தடங்கண்கண்டுந் துணையை நாடிய எம்பெருமான் ஒரு குற்றமுமிலன்; எ-று. (கசு)

சசா தந்நாயல் வேண்டாவோர் நாட்கேட்டுந் தாழாது
வந்தானீ பெய்துதல் வாயான்மற்—றெந்தாய்
மறிமகர வார்குழையாள் வாழானீ வாரா
லெறிமகரங் கொட்கு மிரா.

எ-து தோழி நெறிவிலக்கி வரைவுகடாயது.

இ-ள். சிலவைக் கொணர்ந்து ஆராயல்வேண்டுவதில்லை; நல்லதொரு நாட்கேட்டு நீட்டியாதே நீவரைதற்கு வந்தால் இவளை எய்துதல் மெய்ம்மையால்: எம்மிறைவனே! எறிசுறுக்கள் கழியெங்குஞ் சுழலுமிராவின்கண் வா

ரல் : வரின், மறிமகர வார்குழையாள் உயிர் வாழாள் ; எ-று. (கரு)

சஎ பண்ணாது பண்மேற்றே பாடுங் கழிக்கான
லெண்ணாது கண்டார்க்கே யேரணங்கா—லெண்ணாது
சாவார்சான் றாண்மை சலித்திலா மற்றிவளைக்
காவார் *கயிறூரீஇ விட் டார்.

**எ-து பாங்கன் றலைமகனைக் கண்டு தலைமகளை வியந்துசொல்லியது.**

**இ-ள்.** யாழினைப் பண்ணாது பண்மேற்சேரத் தேன்கள்பாடுங் கழிக் கானலின்கண் ஆராயாதே வந்து கண்டார்க்கே அழகிய தெய்வங்களாம், ஆதலான், அறிவினானாராயாது இறந்துபடுவார் சான்றாண்மையின்கண் வேறுபட்டிலாமற்றிவளைக்காவாது கயிறூரீஇவிட்டார் சான்றாண்மையின் வேறுபட்டார் ; **எ-று.** (கசு)

சஅ திரைமேற்போந் தெஞ்சிய தெண்கழிக் கானல்
விரைமேவும் பாக்கம் விளக்காக்—கரைமேல்
விடுவாய்ப் பசும்புற விப்பிகான் முத்தம்
படுவா யிருளகற்றும் பாத்து.†

**எ-து தலைமகற்கு இரவுக்குறி மறுத்தது.**

**இ-ள்.** திரைமேற்போந்து கரைமேலொழிந்த விடுவாயையும் பசும்புறத்தையுமுடைய இப்பிகான்ற முத்தம், தெண்கழிக்கானலின் விரைமேவும் பாக்கம் ஒளியுண்டாம்வகை இருள்படுமிடமெல்லாம் அவ்விருளைப் பகுத்தகற்றும் ; **எ-று.** (கஎ)

சகூ எங்கு வருதி யிருங்கழித் தண்சேர்ப்ப
பொங்கு திரையுதைப்பப் போந்தொழிந்த—சங்கு
நரன்றுயிர்த்த நித்தில நள்ளிருள்கால் சீக்கு
வரன்றுயிர்த்த பாக்கத்து வந்து.

**இதுவுமது.**

**இ-ள்.** எவ்விடத்தானே வருவாய் இருங்கழித்தண் சேர்ப்பனே! பொங்குதிரைகளானே யுதைக்கப்பட்டுப் போந்து கரையின்கட் டங்கிய சங்குகள்

* "வண்டலர் கோதை வாட்கண் வனமுலை வளர்த்த தாயர், கண்டுயிருண்ணுங் கூற்றங் **கயிறூரீஇக்** காட்டியிட்டார்." என்றார் **சிந்தாமணியினும்.** (இலக்கணை. அ0.)

† இது பகற்குறி நேர்வாள்போல் இரவுக்குறி விலக்கியது எனக்கொள்வர் **நச்சினார்க்கினியரும்.** (தொல். கள, உங.)

கதறிப் பொறையுயிர்த்த முத்தங்கள் செறிந்த இருளை இடங்களினின்றுஞ் சீயாநிற்கும்: திரைகொணர்ந்து போதவிட்டனவற்றைக் கண்டார் வரன்று நின்ற பாக்கத்தின்கண் ; எ-று. (கஅ)

ரு௦ திமில்களி றாகத் திரைபறையாப் பல்புட்
டுயில்கெடத் தோன்றும் படையாத்—துயில்போற்
குறியா வரவொழிந்து கோலநீர்ச் சேர்ப்ப
நெறியானீ கொள்வது நேர்.

எ-து தோழி வரைவுகடாயது.

இ-ள். * திமிலே களிறாகத் திரையே பறையாகத் துயில்கெடத்தோன்றும்படை புட்களாகக், கனுக்கண்டாற்போலத் தேறமுடியாத களவின் கட்டனியேவரும் வரவினை யொழிந்து, கோலநீர்ச்சேர்ப்பனே! நெறியானே வரைந்து இவளைக்கொள்வது நினக்குத்தகுதி ; எ-று. (கக)

ருக கடும்புலால் வெண்மணற் கானலுறு மீன்கட்
படும்புலால் பார்த்தும் பகர்து—மடும்பெலாஞ்
சாலிகை போல்வலை சாலப் பலவுணங்கும்
பாலிகை பூக்கும் பயின்று.

எ-து தலைமகற்குத் தோழி குறைநேர்ந்து பகற்குறியிடமறியச் சொல்லியது.

இ-ள். கடும்புலாலையுடைய வெண்மணற் றண்கழிக்கானலின்கண் இருந்து, யாங்களாங்கடுத்த மீனுகிய படுபுலாலின்கட் புட்டிரியாமற்பார்ப்பேம் : அவற்றை விற்பதுஞ்செய்வேம் ; அக்கானலின்கண் அடும்பெல்லாம் பாலிகைபோலப் பூக்கும்:† சாலிகை விரிந்தாற்போல வலைகளும்உணங்கும்; எ-று

ருஉ திரைபாக ளுகத் திமில்களி றாகக்
கரைசேர்ந்த கானல் படையா—விரையாது
வேந்து கிளர்ந்தன்ன வேலைநீர்ச் சேர்ப்பநா
ளாய்ந்து வரைத லறம்.

எ-து தலைமகனைத் தோழி வரைவுகடாயது.

இ-ள். திரையே பாகனாகத் திமிலேகளிறாகக் கரைசேர்ந்த கானலின் கண்ணுள்ள பலபுட்களே படையாக வேந்துகிளர்ந்தன்ன வேலைநீர்ச் சேர்ப்ப

* திமில் - மீன்படகு.

† சாலிகை – மெய்புகுகருவி.

னே! விரையாதே நல்லநாளாராய்ந்தறிந்து வரைந்திவளைக்கோடல் நினைக்கற மாவது ; எ-று. (௨௧)

௫௩ பாறு புரவியாப் பல்களிறு நீடிமிலாத்
தேறு திரைபறையாப் புட்படையாத்—தேறுத
மன்கிளர்ந்த போலுங் கடற்சேர்ப்ப மற்றெமர்
முன்கிளர்ந் தெய்தன் முடி.

இதுவுமது.

இ-ள். பாறே குதிரையாக நீண்டதிமிலே பலகளிறுகளாகத் தெளிந்த திரையே பறையாகப் புட்களே படையாகத் தேறுத வேந்துகள் படையெழுந்து கிளர்ந்தனபோலுங் கடற்சேர்ப்பனே! எமருடைய முன்னேசென்று இவளை நீயே புணர்ச்சி முடிப்பாயாக ; எ-று. (௨௨)

௫௪ வாராய் வரினீர்க் கழிக்கான னுண்மணன்மேற்
றேரின்மா காலாழுந் தீமைத்தே—யோரிலோர்
கோணுடல் வேண்டா குறியறிவார்க் கூஉய்க்கொண்டோர்
நாணுடி நல்குத னன்று.

இதுவுமது.

இ-ள். வாராதொழிவாயாக : வருவையாயின் நீர்க்கழிக்கானல்தான் நுண்மணன்மேல் நின்றேர் பூண்ட குதிரை காலாழுந்தீமையுடைத்தாதலான் ; ஒத்தகுலத்தார்க்குத் தொடர்ச்சிகோடலை ஐயுற்றுராய்தல்வேண்டா: நிமித்தமறிவாரையழைத்து நல்லதொருநாளை நாடி இவட்குநல்குதல் நன்று; எ-று. (௨௩)

௫௫ கண்பரப்ப காணாய் கடும்பனி கால்வறேர்
மண்பரக்கு மாயிருண் மேற்கொண்டு—மண்பரக்கு
மாறுநீர் வேலைநீ வாரல் வரினாற்று
ளேறுநீர் வேலை யெதிர்.

இதுவுமது.

இ-ள். இவளுடைய கண்களும் மிக்கநீர்பரப்பகாணாய்: கால்வலிய தேரில் மண்ணெல்லாம் பரக்கும் பெரிய இருண்மேற்கொண்டு உலகமெல்லாம் நிவந்த அலர்பரக்குமாறு, நீருண்ட வேலையுடையாய்! வாரல்: வருவையாயின் இவளுயிர் வாழாள், ஓதமேறுகின்ற நீர்வேலையினெதிரே: எ-று. (௨௪)

௫௬ கடற்கானற் சேர்ப்ப கழியுலாஅய் நீண்ட
வடற்கானற் புன்னைதாழ்ந் தாற்ற—மடற்கான
லன்றி லகவு மணிநெடும் பெண்ணைத்தெம்
முன்றி லிளமணன்மேன் மொய்த்து.

எ-து தலைமகற்கு இரவுக்குறிநேர்ந்த தோழி இடங்காட்டியது.

இ-ள். கடற்கானற்சேர்ப்பனே! கழிகள்சூழ்ந்து நீண்ட மீன் கொலை களையுடைய கானலின்கண் மிகவும்புன்னை தழைக்கப்பட்டு, பூவிதழையுடைய இக்கானலின்கண் உள்ள அன்றில்கள் அழையாநின்ற அழகியநெடும்பெண்ணையையுடைத்து, எம்மில்லத்தின்முன் இளமணல்களும் மொய்த்து; எ-று.

௫௭ வருதிரை தானுலாம் வார்மணற் கான
லொருதிரை யோடா வளமை—யிருதிரை
முன்வீழுங் கானன் முழங்கு கடற்சேர்ப்ப
வென்வீழல் வேண்டா வினி.

எ-து தோழி வரைவுகடாயது.

இ-ள். வருதிரை தான்வந்து உலவாநின்ற ஒழுகிய மணற்கானலின் கண் ஒருதிரைவந்து பெயர்வதற்குமுன்னே இரண்டுதிரைவந்து வீழாநின்ற கானலின்கண் வந்து முழங்குகடற்சேர்ப்பனே! என்னால் வந்து இப்புணர்ச்சியை விரும்பல்வேண்டா; இனிவரைந்து கொள்வாய்; எ-று. (௨௬)

௫௮ மாயவனுந் தம்முனும் போலே மறிகடலுங்
கானலுஞ்சேர் வெண்மணலுங் காணையோ—கான
லிடையெலா ஞாழலுந் தாழையு மார்ந்த
புடையெலாம் புன்னை புகன்று.

எ-து தலைமகற்குத் தோழி பகற்குறிநேர்ந்து இடங்காட்டியது.

இ-ள். மாயவனும் அவன் முன்னோனும் போல, மறிகடலும் கடற்சோலையும் அச்சோலையைச்சேர்ந்த வெண்மணலும் பாராயோ? அக்கடற்சோலையின் நடுவெல்லாம் ஞாழலுந் தாழையுமாயிருக்கும்: நிறைந்த மருங்கெல்லாம் புன்னையாயிருக்கும்: இவற்றையும் விரும்பிப்பாராய்; எ-று.

௫௯ பகல்வரிற் கவ்வை பலவாம் பரியா
திரவரி னேதமு மன்ன—புகவரிய

* "இரவுக்குறி யிடங்காட்டித் தோழி கூறியது" என்றார் நச்சினார்க்கினியநும். (தொல் களவு, ௨௩.)

